உ
சிவமயம்

# சித்தாந்திகளும் ஏகாத்துமவாதிகளே

இது
**"வேதாந்தி"** என்பவரால்

சிதம்பரம்
**ப்ரம்மவித்தியா பத்திரிகையில்**
எழுதப்பட்டபடி,

சென்னை:
**மதராசு ரிப்பன் அச்சியந்திரசாலையில்**
பதிப்பிக்கப்பட்டது

1891

இதன் விலை அணா 1.

உ
சிவமயம்.

# சித்தாந்திகளும் ஏகாத்துமவாதிகளே..

சைவர்களுள் ஒருவகைச்சாரரான துவைதசித்தாந்திகள், அத்துவித சித்தாந்திகளை ஏகாத்துமவாதிகளெனச் சொல்லி யிகழ்ந்து வருகின்றார்கள். அத்துவிதிகள் ஏகாத்மவாதிகளென்பதிற் சந்தேகமில்லை. அவர்களை யிகழ்ந்து பேசும் இச்சித்தாந்திகள் ஏகாத்மவாதிகளல்லரோவெனின் இவர்களும் ஏகாத்மவாதிகள் தான். இவர்கள் மாத்திரமல்ல; வேதப்ரமாணவாதிகள் எவருமே ஏகாத்மவாதிகள் தான். யாங்ஙனமெனின், ஆத்துமாவென்னுஞ் சொல்லுக்குப் பொருள் பிரமம் அல்லது சிவன் எனச் சுருதிகள் கோஷிக்கின்றன. எந்தச் சச்சிதானந்த நித்திய பரிபூரண நிர்ச்சல நிஷ்கள நிர்க்குண நிர்விகார நிஷ்கிரிய நிரஞ்சன நிராதாரப் பொருளை ப்ரம்மமென்று சுருதிகள் கூறுகின்றனவோ, அதே பொருளைச் சிவனென்றும் ஆத்துமாவென்றுங் கூறுகின்றன. அந்த ஆத்துமாவென்றும் சிவனென்றுங் கூறப்பட்ட பிரமப்பொருள், ஒரே பொருளாமன்றி இரண்டு மூன்று முதலிய பல பொருள்க ளன்று. அது பரிபூரணமாயிருப்பதால் ஒரே பொருளாகும். ஒரே பொருளாயிருத்தலாலும் அதற்கு ஆத்துமாவென்றும் பெயர் இருத்தலாலும் ஏகாத்துமாவென்று அந்தப் பொருளைச் சொல்வது குற்றமல்ல. குற்றமல்லாததால் ஏகாத்மா வென்று பிரமத்தைச் சொல்லுகிறார்கள்; அதோடு ஏக ப்ரம்மமென்றும் ஏக சிவனென்றுஞ் சொல்லுகிறார்கள். ஷை துவைதிகள், ஏக ப்ரம்மம் ஏக சிவனென்று சொல்லுகின்றதைவிட்டு, ஏகாத்மா வென்று கூறுவதை மாத்திரம் எடுத்துக்கொண்டமையினாலும் அத்துவிதிகளை யேகாத்துமவாதிகளென்று கூறி யிகழ்வதனாலும், இந்தத் துவித சித்தாந்திகள் பல ஆத்துமவாதிகள், அதாவது ஆத்மாவென்பது கடவுளாதலால் பல கடவுள்வாதிகளாகின்றார்கள்.

ஆத்மாவென்னுஞ் சொல் ஜீவனுக்கும் பிரயோக மிருக்கிறதே யென்று வினவலாம். அஃதுண்மையே. ஜீவனுக்கும் சொல்லப்படுகிறதென்பதை நாமும் அங்கீகரிக்கின்றோம். ஜீவனுக்குச் சொல்லும் போது ஜீவாத்மாவென்றும், பிரமத்துக்குச் சொல்லும்போது பரமாத்மா வென்றும் சுருதி முதலிய கலைகள் சொல்லுகின்றன. ஆத்துமாவென்று பொதுவாகச் சொல்லுமிடத்து அது பிரமப் பொருளில் பிரயோகிக்கப்படுகிறதா? ஜீவப்பொருளில் பிரயோகிக்கப்படுகிறதா? என்னில் பலவிடங்களில் பிரமப்பொருளிலும் சிலவிடங்களில் ஜீவப் பொருளிலும் பிரயோகிக்கப்படுகின்றது. இந்த வுண்மையினை யுணராமல் ஒன்றைப் பிறிதொன்றாகத் திரிபுணர்ச்சி கொண்டு பேசுவதும், வேதாந்திகள், பிரமத்தை அல்லது சிவனைச் சுருதி சொல்லுகிற பிரகாரம் ஆத்துமாவென்று சொன்னால், ஷை சித்தாந்தசைவர் 'ஜீவர்கள் ஒன்றே' யென்று அத்துவிதிகள் சொல்லுகிறாப்போல் ஜனங்களுக்குக் காட்டி யிகழ்வதும் நன்றன்று, மற்ற மதவாதிகளைப்போல வேதாந்திகளும் ஜீவர்களைப் பலவென்றுதான் சொல்லுகின்றார்கள். அதுமாத்திரமா, அந்தக்கரண ஞானேந்திரிய கர்மேந்திரிய வாயுக்களையும், சரீரங்களையும், அபிமானம் ஞாபகம் புண்ணியம் பாவம் சொர்க்கம் நரகம் கருமம் அவித்தை

களையும் வேறுவேறென்றுதான் சொல்லுகின்றார்கள். இப்படிச்சொல்லும் வேதாந்திகளை ஜீவன் ஒன்றென்று சொல்லுகிறது போல் (தத்துவமின்றி வெறும் புராண கதைகளை மாத்திரம் வாசிப்போர்) நினைக்கும்படி ஏகாத்மவாதிகள் என இகழ்ச்சியாய்ச் சொல்வதும் எழுதுவதும் பிரசங்கிப்பதும் நல்லோர்க்கழகல்ல. இது வரையில் சொல்லி வந்ததில் ஆத்துமா வொன்றே என்றும், அந்த ஆத்துமாவிற்குப் பிரமமென்றும் சிவனென்றும் சொல்லப்படுகிற துண்மையென்றும், ஜீவர்கள் பலவென்றும், அவைகளுக்கு இந்திரிய அந்தக்கரணாதிகள் ஒன்றுக்கொன்று வேற்றுமையாய்ப் பலவென்றும் விளக்கினாம்.

இப்படிப்பட்ட் ஜீவாத்மாக்கள் வேதாகம புராணாதிசாஸ்திரங்களின்படி கர்ம பத்தி யோகங்கள் செய்து சித்தசுத்திபெற்றுச் சிவாநுபூதிமானாய் விளங்கும் ஞானாசிரியரை யடைந்து சிரவணாதிகள் செய்து பிரமவடிவான அல்லது சிவ வடிவான அல்லது ஆன்மவடிவான நிலைமையைப் பெற்றுத் தற்போதமான ஜீவபோதத்தையிழந்து காண்பான் காட்சி காணும் பொருளான திரிபுடி தோஷமில்லாமல் ஏகமாய் விளங்குகை வேதாந்தமான அத்துவித சித்தாந்தமாம். ஆத்துமா என்னும் சொல் பிரமம் அல்லது சிவனுக்குப் பிரயோகிக்கப்படும் பிரபல ப்ரமாணங்கள் வருமாறு: -

## அதர்வண வேதத்தில்

### நாரத பரிவிராஜகோபநிஷத் 5 - வது உபதேசம்.

ஆதுரகுடீசகர்க்கு (அடையுமிடம்) பூலோகம் புவர்லோகம், பெகூதகனுக்குச் சுவர்க்கலோகம், அம்சனுக்குத் தபோலோகம், பரமஹம்சனுக்குச் சத்தியலோகம், துரியாதீதன் அவதூதன் இவர்களுக்கு (ஆத்ம) சுவரூபானு சந்தானத்தினால் பிரமரகீடஞாயம்போல் ஆன்மாவிடத்திலேயே கைவல்லியம்.

ஜாக்கிராவஸ்தையைப்போல் சுவப்னாவஸ்தையிலும் ஆத்மநிஷ்டனாயிருக்கிறவ னெவனோ இப்படிப்பட்ட நிஷ்டையை யுடையவன் ப்ரம்மவாதிகளுக்குள்ளே சிரேஷ்டனாயும் முதன்மையானவனாயும் இருக்கிறான்.

### 6 - வது உபதேசம்.

தன்னுடைய எல்லா ஆச்ரமங்களையுங் கடந்து ஆத்மாவிலேயேயிருக்கிற புருஷனெவனோ, அவன் வேதார்த்தங்களைத் தெரிந்தவர்களாலே அதிவர்ணாச்ரமியென்று சொல்லப்படுகிறான்.

## யசுர் வேதத்தில் வராகோபநிஷத்

### 2 - ம் அத்தியாயம்.

தேகாத்மஞானத்திற்கு விரோதியான ஞானம் ஆன்மாவினிடத்தில் எவனுக்குண்டாகிறதோ, அவன் விரும்பாவிட்டாலும் மோக்ஷமடைகிறான்.

**ஷை 4 - வது அத்தியாயம்.**

ஆறு பூமிகளுடைய வெகுகால அப்பியாசத்தினாலே (பிரபஞ்சாதி) பேதங்களற்றுப்போய் ஆத்தும் பாவனையிலேயே நிலைத்திருக்கிற தெதுவோ அதுதான் துரியகா என்கிற ஏழாவது பூமிகா.

## பிரமகீதை

### ஐதரேய உபநிடதார்த்தத்தை யுரைக்கும் அத்தியாயம்.

*சின்மாத்திரமாயுள்ள வெறுஞ்சிவனே திகழ்வான்யாதுக்கு*
*முன்மாத்திரமும் வேறில்லை முற்றுமவனே மொழிவுற்ற*
*நன்மாத்திரமாய் ஆன்மாவென்றுரைக்கு நாமத்தினையுடையான்*
*தன்மாத்திரமேயாகிய அத்தன்மையான சங்கரன்றான்.* 2

## சூதசங்கிதை ஆன்ம அநான்மவிவேகமுரைத்த அத்தியாயம்.

இந்த அத்தியாயத்தில் சிவனை அல்லது பிரமத்தை ஆன்மாவென்றும் மற்றப் பொருள்களை அநான்மாவென்றுஞ் சொல்லுகின்றன. ஜீவன், ஜீவான்மாவானாலும், சிவனை அல்லது ப்ரம்மத்தை நோக்க அநான்மாவாம். சேதனா, சேதனவுலகத்தில் அசேதனம் பஞ்சபூத பௌதிக உலகம்; ஜீவன் சேதனமாயினும் சிவனை அல்லது ப்ரம்மத்தை நோக்க அசேதனமாம். இந்த அத்தியாயத்தை வாசித்துப் பார்க்கின் மேற்சொன்ன விஷயம் நன்கு விளங்கும்.

*ஆதலால் பரமார்த்தமாய்ப் பிரத்தியக்கான்மா பரமேயம்ம*
*போதகுருவுபதேச மாதிகளால் அனான்மாவாப் பொலிந்துதோன்றும்*
*காதலுறுமெவற்றையுமான் மாவாகத்தெரிந்து கொண்டான்மாவையுங்கற்*
*றோதலருந்தவத்தீர் சுத்தப்பிரமமென்றுள்ளே நிச்சயித்து.* (21)

*அத்தகு நிச்சயத்தையுஞ் சின்மாத்திரத்தி லயப்படுத்தியறிஞருள்ளத்*
*தொத்தவவ்விலயத்தையுஞ் சின்மாத்ரமாகத் தெரிவுற்றொளிரா நிற்கும்*
*சுத்த கேவலரூபமா யிருப்போன்சொலும் பிரமஞானியாவன்*
*மெய்த் தவிந்தப் பரநிட்டைசற்குரு கடாக்ஷத்தால் மேவுமாலோ.* (22)

**ஷை ஞானயாக வைபவமுரைத்த அத்தியாயம்.**

மருவேகத்துவமியல்பினுளவான்மாவினுக்கு வந்த பேதம் பிராந்தியனன்றி யின்றா, லொருவாது கடாதிகட்குப் பேதமங்கீகரித்தே யொளிரான்ம பேதமிலை யென்றுரைக்கப்பட்ட, துருவாரக்கடாதிகள் பேதமும் வியவகாரத் துளவாகும் பரமார்த்தத்திலவாகு முணர்வீர், அருகாத பரமார்த்த சாத்தியமே யாலென்றப் பேதந்தனையுரைக்க வென்கூடாதென்னில். 28)

**ஷை பராசத்தி விசாரமுரைத்த அத்தியாயம்.**

*பாவுதானென்னும் நிறையான் மாவினின்றும் பல்லுலகமுஞ்சீர்*
*மேவுசீவனு மீச்சுரனும் மாயாசத்தியும் வேறல்லரம்மா*
*வோவில் சுயம்பூரண நற்சிவஞான முள்ளவனாமுயர்வு பூண்டோன்*
*தாவில்சார்வ பௌமன் போன்று சுதந்தரனாகித் தழைவானென்றும்.* (11)

## பிரமகீதை பிரகதாரணியவுபநிடதம்.

*இந்தப்பிராணாபானாதியாரா லுண்டாயியங்குவதிங்*
*கெந்தப்புருடன் முன்பாக வெல்லாமிலங்கவற்றாகுந்*
*தொந்தப்பட வெத்தொழிலுஞ் செய்தேவன்றொழிலற்றிருக்கின்றா*
*னந்தப்பரமனேயாவர்க்கு முள்ளாமான் மாவாகின்றான்.* (3)

**ஷை சகலவுபநிடதங்களி னர்த்தத்தைத் தொகுத்துரைக்கு மத்தியாயம்.**

*பாடுகின்றவெக்கலையின் பயனுந் தெரிந்து பகர்கின்றே,*
*னோடுகின்ற சிந்தையொழித் தொருப்பட்டெவருங் கேண்மினுரை,*
*யாடுகின்ற நானென்னு முரைக்குமறிவுக்கு மறிவாய்,*
*நாடுகின்ற வுணர்வொன்றுண்டதுவே யான்மா நமக்கெல்லாம்.* (2)

## கூர்மபுராணம்

**சாங்கியயோகமுரைத்த அத்தியாயம்.**

*சொச்சமாய்ச்சாந்தமாகிச் சூக்கமாய் ஒன்றாய் நாளும்*
*நிச்சமாய் ஞானமாகி யெங்கணும் நிறைந்ததாகி*
*அச்சமில் தமத்துக்கப்பாலாய கேவலமாய் என்றும்*
*எச்சமிலான்மா என்றொன் றினி துள தென்பர்மேலோர்.* (3)

*பஞ்சபூதங்களன்றுபகரு ஞானேந்திரியங்கள்*
*அஞ்சுமன்றுரைத்தகன் மேந்தியங்களோரைந்து மன்றாம்*
*எஞ்சலில் சத்தமாதிவாக்காது யிவைகளன்று*
*செஞ்செவே மனாதியன்று திகழுமவ்வியத்தமன்றே.* (6)

*உழிதரு பிராணனன்று கருத்தனன்றுண்போனன்று*
*தழைபிரகிருதியன்று புருடனுமன்று சால*
*விழைவுறு மாயையன்று விளங்கிய ஆன்மாயாருக்*
*தொழுதரு மறைகளேத்துஞ் சுத்தசைதனியமாமால்* (7)

*பொருவில்'வேதாந்தத்துண்மையறிந்தவர் புகன்ற ஆன்மா*
*விரிதருவியாபியென்றும் மேவுதத்துவங்கட்கெல்லாம்*
*கரியது வென்றும் மூலப்பகுதியுங் கடந்து நின்ற*
*துரியமதாகும் சுத்த வெளியென்றுஞ் சொல்லுவாரால்* (11)

## இலிங்கபுராணம்

### தியானவிதியுரைத்த அத்தியாயம்.

*காரியகாரணங்கள் யாவையுங்கா சொன்றில்லாத்*
*தாருமான்மாவின்கண்ணே யமருமென்றறிந்துகொண்டோன்*
*ஓர்தருபொருள்க டன்னையன்றி வேறுளதென்றெண்ணி*
*யோர் தருவுள்ளஞ்சொல்லா தின்பமுற்றிருப்பனன்றே.* (11)

## கைவல்லியம்.

*உருவங்களிரதங்கள் பரிசங்கள் ஒரு பூவிலொன்றாகுமென்றாலுமே*
*கரணங்களோ ரொன்றிலோரொன்று தெரியுங்கணக்கன்றி வாராதுகாண்*
*அருமந்தசச்சிதானந்தச் சுபாவங்கள் ஆன்மாவின் வடிவாகிலும்*
*பிரபஞ்சமயமாம் விருத்திபேதத்தினாற் பேதங்களா மைந்தனே.* (108)

## வேதாந்த சூடாமணி.

*கூறுமிவையிரண்டு மோரிலிங்கமென அறிக*
*கூடத்தனே பிரமமென மறித்துமறித்துந்,*
*தேறவுரைத்திடலப் பியாசமாந் துரியன்றிகழ்*
*பிரமாணாதீத னென்கையபூர்வதையாம்,*
*பாறிலுயிரொன்றறித லெலாமறித லென்கை*
*பலம் பிரத்தியகான்மவுருவாம் பிரமந்தனக்கு,*
*மாறரிய ஐந்தொழிற்கத்திருத்துவஞ் செப்புறுதல்*
*வயங்கருத்த வாதமென மதித்திடுக தெரிந்தே.* (133)

## ஞானவாசிட்டம் இட்சுவாகுகதை.

*முழுதுவடிவமா யொன்றாமான்மாமுழுது சத்தியினுங்*
*கெழுமு நதியிலும் வரிகளிற் கீலாலம்போ னின்றொளிரு*
*மொழுவினினை வின்பரப்பிலதாயொன்றாஞ்சற்பாவந்தன்னிற்*
*றழுவுகூறு மாத்திரமாயுணர்வாய்ச் சகலசகங்களையும்.* (49)

இதுவரையில் காண்பித்த பிரமாணங்களினால் ஆத்துமாவென்று வருமிடங்களிலெல்லாம் ப்ரம்மம் அல்லது சிவனென்றே பொருளாம். பிரமம் அல்லது சிவன் அல்லது ஆத்துமாவென்கின்ற பொருள் கடவுளாயிருப்பதாலும் அந்தக்கடவு

ளொன்றாயிருப்பதாலும் அதைச் சித்தாந்த சைவரு மொத்துக்கொள்ளக் கடமைப்பட்டிருப்பதாலும் ஷை சித்தாந்த சைவரும் ஏகாத்துமவாதிகளென்பதி லையமில்லையென்க. சிவன், பிரமம், ஆத்துமாவாகிய மூன்று பதங்களும் ஒருகடவுளையே சுருதிகள் கூற, ஷை சைவசித்தாந்திகள், சிவன் அல்லது பிரமம் என்னுஞ் சொல்லை மாத்திரங் கடவுளாகவும் ஆன்மாவை ஜீவாத்துமாவாகவுங் கொண்டு விபரீதப்பட்டார்கள். இப்படிப் பட்டார்களென்பதற்கு வேறு சாட்சி வேண்டுவதில்லை. ஜீவான்மாவைப் பரிபூரண மென்று அவர்கள் பகர்வதே போதுமானதாம். ஜீவாத்துமாக்கள் கண்டமேயன்றிப் பரிபூரணமல்ல. அதைப் பூரண மென்றொப்பி அத்துடனே சிவனையும் பூரணமென்று சொல்லிச் சிவனுக்கு வேறான ஆத்துமா பூரணமென்றும், அது ஆணவத்தால் மறைப்புண்டு ஏகதேசமாய் ஜீவத்துவத்தையடைந்ததென்றும், அஞ்ஞானமுள்ளவரையில் அப்படியே கண்டப்பட்டிருக்குமென்றும் பகர்ந்து, அதன்மேல் முத்தியில் ஜீவத்துவம் போய்ப் பூரண ஆன்மா வாகின்றதென்கிறார்கள். வேதாந்திகளோ பிரமசிவவடிவான பூரண ஆன்மா அவித்தையிற் பிரதிபலித்து ஜீவனாயிற்றென்றும் அந்த ஜிவனே பிறப்பிறப்பினையடைந்து முத்தியில் பூரண ஆன்மாவாயிற்றென்றும் அந்த ஆன்மாவேதான் சிவனென்றும் ப்ரம்மமென்றும் சொல்லப்படுகிறதென்றும் சொல்லுகிறார்கள். இவ்விரண்டு மதசித்தாந்தமும் ஊகித்துணராதார்க்கு வேறு வேறு போலத்தோன்றினும் ஊகித்துணரும் நுட்பபுத்தியுடையார்க்கு ஒருவித சித்தாந்த மென்றே விளங்கும். இவ்விரண்டு மதசித்தாந்தமும் பேதப்படு மிடத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். ஒரேபொருளுக்குச் சிவனென்றும் பிரமமென்றும் ஆன்மாவென்றுஞ் சொல்லுகின்றார்கள் வேதாந்திகள்; சித்தாந்திகளோ, பிரமமாகிய சிவன் வேறு, ஆன்மாவேறு என்கின்றார்கள். அதிலும் பலகோடி ஆன்மாக்களென்று சொல்லி அவைகளைத் தனித்தனிப் பூரணமென்றுஞ் சொல்லுகிறார்கள். இதுசுருதியுக்தி அனுபவ விரோதம். பிரமம் அல்லது சிவன் அல்லது ஆத்துமாவென்னுஞ் சொல், கடவுளாகிய ஒரு பொருளுக்கிருக்க அதில் பிரமம் அல்லது சிவனாகிய இரண்டு சொற்களை மாத்திரங் கடவுளுக்குச்சொல்லி, ஆத்துமாவென்னுஞ் சொல்லை மாத்திரம் வேறு பொருளுக்கு அதாவது ஜீவாத்துமாவுக்குச் சொல்வது எப்படியிருக்கிறதென்றால் கை, கரம், அஸ்தம் என்கிற மூன்று சொற்களும் கையாகிய ஒரு பொருளுக் கிருக்க, அதற்குக் கை, கரமாகிய இருசொற்களைச் சொல்லி அஸ்தமென்கிற சொல்லை மாத்திரம் அதற்குச் சொல்லாமல் விரலுக்குச் சொல்வது போலிருக்கிறது. ஆத்துமாவென்கிற சொல்லை ஜீவனுக்கு உபயோகப்படுத்தப்படாதென்று யாம் பகரவில்லை; வேதாந்திகளும் ஜீவனுக்கு உபயோகிக்கிறார்கள்; சித்தாந்திகளும் உபயோகிக்கிறார்கள். அதுவரையில் இருவரு மொரு தன்மையராம். வேதாந்திகள் பிரமத்துக்கு அல்லது சிவனுக்கு அதை உபயோகிக்கும் போது, சித்தாந்திகள், அவர்களை ஏகாத்துமவாதிகள் என்று இகழ்ந்து பேசுவதுதான் சித்தாந்திகள் பேரிலுள்ள பெருங்குற்றம். ஒரு சித்தாந்தி அவ்வாறு சொல்லிடின் அது நியாயமா, அல்லவா, நாம் அப்படிச்சொன்னால் நாமும் அந்தத் தூஷணைக்குடன்பட வேண்டுமே, அன்றிப்பலகடவுள் வாதியு மாகவேண்டுமே, அதனோடு வேதாகம சாஸ்திர விரோதியாகவும் வேண்டுமே யெனக் கருதாமல் மற்றவர்களும் அவ்வாறு சொல்லுவது பின்னும் பெருங்குற்றமாம்.

பலகோடி ஆத்துமாக்கள் தனித்தனிப்பரிபூரணமென்று சொல்லி, அவைகளுக்கு வேறாகச் சிவன் அல்லது பிரமத்தையும் பரிபூரணமென்று சொல்லுவது யுத்தி

அநுபவங்களுக்கும் விரோதம். ஒரு பொருளின் கண் இன்னொரு பொருளிருத்தல் கூடாதே. அவர்கள் சொல்லுகிறபடி பரிபூரண ஆன்மாவின் கண் பரிபூரண சிவன் இருக்கக்கூடுமா? அது தவிர வொவ்வொன்றும் பரிபூரண இலக்கணமுள்ள பல கோடி ஆன்மாக்கள் இருக்கின்றனவென்று சொல்வது சரியல்லவே. ஒரு பொருளினி டத்தில் இன்னொரு பொருளேயிருத்தல் நியாயவிரோதமாயிருக்கப் பலகோடி ஜீவான்மாக்கள் ஒன்றிலொன்றிருக்கு மென்று சொல்வது ஒவ்வுமா? இவ்வளவு பேதைமையைத் தங்களிடத்தில் வைத்துக்கொண்டிருப்பதோடு போகாமல் தங்களை ப்பதிஞானிகளென்றும் வேதாந்திகளைப் பசுஞானிகளென்றுங்கூறுவது பொருந்துமா? கடவுளுக்குப்பிரமமென்றும் சிவனென்றும் ஆத்துமாவென்றும் பெயரிருக்கவும், அம்மூன்று பெயர்களையும் அக்கடவுளுக்கு வேதாந்திகள் சொல்லவும் அவற்றிலிர ண்டு சொற்களைக் கடவுளுக்கும் ஒரு சொல்லை ஜீவர்களுக்கும் ஆக்கிக்கொண்ட குற்றம் அபாரமாய்ச்சித்தாந்திகளுக்கிருக்க, இந்தக்குற்றத்தைக் குணமாகக்கொண்டு, குற்றமற்றவேதாந்திகளைப் பசுஞானிகளென்றும் தங்களைப்பதிஞானிக ளென்றுஞ் சொல்லிக்கொள்வது விந்தையாகவுமிருக்கிறது! அறியாமையாகவு மிருக்கின்றது!!

நிற்க; சிவன், அல்லது பிரமமான கடவுளுக்கு ஆன்மாவென்கிற பெயரிருக்க, அதை ஜீவர்களுக்கு உபயோகப்படுத்துவதால் தாங்களே கடவளென்று சொல்லிக் கொள்ளுகிறவர்களுமாகின்றார்கள். (பிரமவித்தியா, நந்தன ஷூ தைமீ 72)

பிரமம் அல்லது சிவன் அல்லது ஆன்மா வென்கிற பெயர் சச்சிதானந்த நித்திய பரிபூரண இலக்கணங்கொண்ட வொருபொருளுக்கிருக்க, அவற்றில் பிரமம், சிவனாகிய விரண்டுபெயரை மாத்திரம் அப்பொருளுக்குவைத்து, ஆன்மாவென்னும் பேரைஜீவான்மாவுக் கமைக்கிறார்கள் துவிதசைவசித்தாந்திகள் என முன்னரே பேசி யிருந்தாமன்றோ? இப்போதுமதைத்தொடர்ந்து பேசுவாம்.

வேதாந்திகள் பந்ததசையில் நானென்பதற்குப் பொருள் ஜீவனாகவும் முத்தி தசையில் நானென்பதற்குப் பொருள் பிரமம் அல்லது சிவன் அலலது ஆன்மாவாக வுங்கொள்ள, துவித சைவசித்தாந்திகள் பந்ததசையிலானாலுஞ்சரி, முத்திதசையி லானாலுஞ் சரி, பிரமமென்றும் சிவனென்றுஞ் சொல்லப்பட்ட ஆத்தும சொரூபத்தை யே நானென்பதற்குப் பொருளாகக் கொள்ளுகிறார்கள். முத்திதசையில் ஷை பிரமம் அல்லது சிவன் அல்லது ஆன்மாவை நானென்பதற்குப் பொருளாகக்கொள்வது சரிதான். இதை வேத முதலிய நூற்பிரமாணங்களும் அங்கீகரிக்கின்றன. பந்ததசை யிலும் அப்பொருளை நானென்பதற்குப் பொருளாகக்கொள்வதுதான் தவறு. இதற்கு நூற்பிரமாணங்களுமில்லை. வேதாந்திகளும் ஆன்மசிவப்பிரமப் பொருளையே பந்த தசையில் நானென்பதற்குப் பொருளாகக்கொள்ளுகிறார்களென்னின், அங்ஙனமில் லையென்பதைக்காட்டுவாம். வேதாந்திகள், ஆன்ம சிவப்பிரமப்பொருள் அவித்தை யிற் பிரதிபலித்ததென்றும் அந்தப் பிரதிபலனவடிவமே ஜீவனென்றும் அந்த ஜீவன் அணுவென்றுஞ் சொல்ல, சித்தாந்திகள் ஆன்மசிவபிரமப்பொருள் ஆணவமலத்தாற் கட்டுண்டு அணுத்தன்மை யடைந்ததென்றும் அந்தச்சமயத்திற்கு ஜீவன் அல்லது பசுவென்னும் பெயர்வாய்ந்ததென்றும் சொல்லுகின்றார்கள். வேதாந்திகள் ஜீவனைப் பிரதிபிம்பஸ்தானத்தில் வைக்கின்றமையால் ஜீவன்படும் ஜனன மரண துன்பங்க ளை ஜீவனே யனுபவிக்கிறான்; பிம்பமான ஆன்ம சிவ பிரமப்பொருள் அனுபவிப்ப

தில்லை. எங்ஙனமெனின், நீரிற்பிரதிபலித்த பிரதிபலன சூரியன் அலைவானானால் அந்த அலைதல் பிரதிபலன சூரியனுக்கேயன்றிப் பிம்பசூரியனுக் குண்டாகாது. இதைப் போலவே பிரதிபலன சூரியனை யொத்த ஜீவன் படுந்துன்பங்களை ஜீவனனு பவிப்பானேயன்றி, பிம்பத்தையொத்த ஆன்மசிவப்பிரமம் அனுபவியாது. சித்தாந்தி கள் சொல்லுகிறபடி பார்த்தால் அவர்கள் ஜீவனை ஆன்மசிவப்பிரமப்பொருளின் பிரதிபிம்பமாய் ஒப்பாமையானும் ஆன்மசிவப்பிரமப்பொருளை ஜீவனாகச்சொல்வ தானும் ஜீவன்படுகிறதுக்கங்களெல்லாம் ஆன்மசிவபிரமப்பொருளே படுகிறதாகச் சொல்ல வேண்டியவர்களா யிருக்கிறார்கள். பிரதிபலனத்துக்கு வரும் லாப நஷ்டங் கள் பிம்பத்தைச் சாராதது போல அதாவது பிரதிபலன் சூரியனுக்கு வரும் நயகஷ்டங்கள் பிம்பசூரியனைச் சாராததுபோல ஜீவனுக்கு வரும் நயநஷ்டங்கள் ஆன்ம சிவப்பிரமத்தைச் சாராவென்க. இப்படிச் சொல்வதால் சித்தாந்திகள் பந்தத்திலும் முத்தியிலும் நானென்ற சொல்லுக்குப் பொருள் பரிபூரணப்பொருளான ஆன்மசிவபிரமப் பொருளென்றே சொல்லுகிறவர்களாகி, ஜனனமரண சொர்க்க நரக பல இலாப நஷ்டங்களை ஷை ஆன்மசிவபிரமப்பொருளே அனுபவிக்கிறதென்று சொல்லுகின்றவர்களாகவும் வேதாந்திகள் முத்தியில் மாத்திரம் நானென்கிற சொல்லுக்குப் பொருள் பரிபூரண ஆன்மசிவபிரமப்பொருளைச் சொல்லிப் பந்தத்திலு ண்டாகும் ஜனன மரணசொர்க்க நரக பல இலாப நஷ்டங்களை ஆன்மசிவ பிரமப் பொருளுக்குச் சம்பந்தமில்லாமல் ஜீவனே யனுபவிக்கிறதென்று சொல்லுகிறவர் களாகவு மாகிறார்கள்.

சித்தாந்திகள் சொல்வதுபோல ஜீவான்மாக்களும் பரிபூரணம்; ஆன்மசிவ பிரமப் பொருளும் பரிபூரணமாகட்டுமே யென்னின் அவ்வாறு கூறினால் சுருதி முதலிய கலைகளுக்கும் விரோதம்; யுக்தி யனுபவங்கட்கும் பொருந்தாது. ஆன்மசிவப்பிரமம் பூரணமென்பது சித்தாந்திகட்கும் வேதாந்திகட்கும் உடம்பாடே. மற்றப்படி யொவ்வொரு ஜீவான்மாக்களும் தனித்தனிப் பூரணமென்பது சித்தாந்தி கட்கு மாத்திரம் உடம்பாடாகும். ஷை இரண்டையும் பூரணமாய்ச் சொல்லுமிடத்து ஆன்ம சிவபிரமப்பொருள் சத்தாயிருப்பது போல் ஜீவான்மாக்களும் சத்துப் பொருளாமா? ஒரு பரிபூரண சத்துப்பொருளின் கண் மற்றொரு பரிபூரண சத்துப் பொருளிருத்த லெங்ஙனங் கூடும்? ஒரு பரிபூரண சத்துப்பொருளின்கண் பிறிதொரு சத்துப்பொருளேயிருத்தல் அமையாதாகப்பல்லாயிரங்கோடிபரிபூரண சத்துப் பொரு ள்களிருத்தலென்பது ஒவ்வுமா? ஜீவான்மாக்களை அபரிபூரண சத்துப்பொருளென் றாலும் அமையாதே. ஒருபரிபூரண சத்துப் பொருளினிடத்து ஏகதேசமான ஒரு அணுசத்துப்பொருளிருத்தலென்பதும் அசம்பவமாக, பலகோடி அணுசத்துப்பொருள் இருக்குமென்கை வாய்ச்சொல்லேயன்றிப் பிறிதில்லை. பலகோடி அணுசத்துப் பொருளேயிருத்தல் கூடாதென்னின் பலகோடி பரிபூரணசத்துப் பொருளிருக்கு மென் றுரைத்தலை யெங்ஙனம் அங்கீகரிக்கலாகும்? ஆன்ம சிவப்பிரமம் பரிபூரணமெ ன்றும் சத்தென்றும் வேதாந்திகளும் சித்தாந்திகளும் ஒத்துக்கொள்ளுகிறார்க ளென்பது உண்மை. ஜீவான்மா விஷயத்தில் இருவரும் வேறுபடுகின்றார்கள். ஜீவர்களை. அணுவென்றும் சொப்பனத்தைப்போலச் சத்துப்போலியென்றும் சொல்லு கிறார்கள் வேதாந்திகள்; சித்தாந்திகளோ, சிவனென்றும் பிரமமென்றும் ஆன்மாவென்றுஞ் சொல்லப்பட்ட பரிபூரணப் பொருளுக்கு மேற்படி பெயர்களில் சிவன் பிரமமென்னும் இரண்டு பெயர்களைத்தள்ளி, ஆன்மாவென்னும் பெயரை

மாத்திரம் எடுத்துக்கொண்டு, அப்பெயரையுடைய பொருள் ஜீவான்மாவென்றும் அதற்குப் பிரமமான சிவன் வேறென்றும் அந்த ஆன்மா ஆணவமலத்தால் கட்டுண்டு ஜீவனாயிற்றென்றுங் கூறுகிறார்கள். கூறுவதால் பிராமே சிவனாகவும் சிவனே ஆன்மாவாகவும் ஆன்மாவே ஜீவனாகவும் ஆகின்றன. இதனால் பிர மமென்னுஞ் சொல்லுக்கும் சிவனென்னுஞ் சொல்லுக்கும் ஆன்மா வென்னுஞ் சொல்லுக்கும் ஜீவனென்னுஞ் சொல்லுக்கும் பொருள் ஒன்றேயாமென ஏற்படுகின்றது. சித்தாந்திகள் சொல்லுகிறபடி ஆன்மா ஆணவமல சம்பந்தத்தால் ஜீவன் அல்லது பசு என்கிற பேர் பெறுகின்றது. பெறுவதால் ஆன்மாவென்னுஞ்சொல்லுக்கு ஒருபொருளும் ஜீவனென்னுஞ் சொல்லுக்கு ஒரு பொருளுமாய்ப் பேதப்படுகின்றதில் லை. ஆன்மாவுக்கு ஆணவமல சம்பந்தத்தைப்பற்றியே ஜீவனென்கிற பேர்வந்தமை யால் ஆன்மா ஒன்று, ஜீவன் ஒன்று ஆக இரண்டு பொருளன்று; ஒரே பொருளாம். இனிப் பிரமமான சிவன் வேறு ஆன்மாவேறு என்னின் பிரமமான சிவனும் பூரணம்; சித்தரந்தசைவர்கள் சொல்லுகிறபடி சிவனுக்கு வேறான ஆன்மாவும் பூரணம்; அன்றி யிரண்டும் சத்துப்பொருள். இது எப்படிப்பொருந்தும்? பொருந்தாமையால் சித்தாந்தி கள் செய்யும்வாதம் துர்ப்பலவாதமாமென்ற றிந்திடுக.

ஆன்ம சிவப் பிரமமான சச்சிதானந்தப் பொருளைச் சிவனென்றும் பிரமமென் றும் அழைத்து அதை வேறுவைத்து, அப்பொருளுக்கு மற்றொரு பெயரான ஆன்மா வை ஷெ சிவனுக்கு வேறுபடுத்தி, அதை ஜீவான்மாவெனக்கொண்டு, அந்த ஜீவான் மாவே நானென்பதற்குப் பொருளென்கிறார்களாகையால், சித்தாந்த துவிதசைவர்கள், ஜீவனையே கடவுளென்றும், கடவுளையே ஜீவனென்றும் சொல்லுகின்றவர்களாகி, அந்தக்கடவுளை நானென்று சொல்லுகின்றவர்களாகவு மாகின்றார்கள். இவ்வாறு சொல்வதால் துவிதிகள் பொருளைப்பொருளாகக் கொள்ளாதவர்களும் பொருளல்ல வற்றைப் பொருளாகக் கொள்ளுகின்றவர்களுமான விபரீதவுணர்ச்சியுள்ளவர்களாம் என்க.

சிவனென்றும் பிரமமென்றும் சொல்லப்படுகிற சத்துப்பொருளுக்கு ஆன்மா வென்றும் ஏகமென்றும் பேரிருப்பதாலும் அதற்கு வேதமுதலிய நூல்கள் பிரமாண மாயிருப்பதாலும் அந்தப்பிரமாணங்களைப் பிரமாணமென வேதாந்திகளைப்போலச் சித்தாந்திகளும் அங்கீகரிக்கக் கடமைப்பட்டிருப்பதாலும் வேதாந்திகளைப் போலச்சித்தாந்திகளும் ஏகாத்துமவாதிகளா மென்பதிற் றடையேதுமில்லை. இங்ங னமாக வேதாந்திகளை யேகான்மவாதிகளெனச் சித்தாந்திகள் இகழ்ந்து கூறுவதென் னை? இதுயரங்ஙன மிருக்கின்றதெனின் ஒரு மனிதன் மற்றொரு மனிதனை நோக்கி, "மனிதனே!" எனவிகழ்ந்து கூறுவதனோ டொக்குமென்க. பிரமத்தின் பரியாய நாமமாக ஆன்மாவையும் சிவனையும் வேதம் ஸ்மிருதி புராணாதிகள் கூற, அவை களையெல்லாம் அப் பிரமாணமாக்கி, அவைகளுக்குமாறாக, யாரோ சில அவைதிக துவித சித்தாந்திகள் துரபிமானத்தினாலும் மதமாறினதினால் நேர்ந்த துவேஷத்தி னாலும் எழுதிவைத்த அப்பிரமாண நூல்களைப் பிரமாண நூல் களெனக்கொண்டு, அவைகளை அவைக்கண் எடுத்துக்காட்டுதலும் பிரசங்கித்தலும் எழுதுதலும் பேசுதலும் நன்றாமோ!

# சித்தாந்திகளும் ஏகாத்துமவாதிகளே

ஆன்மாவென்பது சிவம் அல்லது பிரமமெனச் சதுர்தச வித்தைகளும் தம்பட்டம் அடிக்கவும் அவ்வாறு வேதாந்திகள் சிவஸ்தானத்தில் ஆன்மாவென்னும் சொல்லைப் பிரயோகிக்கவும், அந்தச்சிவனான ஆன்மாவை ஜீவான்மாவாக வேதாந் திகள் சொல்லுவதாய்ச் சொல்லியும், அதோடு ஏகாத்துமவாதிகளென இகழ்ந்தும் வருவது மதியீனமாம்; அன்றிச் சிவனான ஆன்மாவை ஜீவான் மாவாகக் கொண்டு, அந்தப் பிரம சிவ ஆன்மாவைவிட வேறே ஜீவனென்னும் பொருளொன்றிருப்பதாய் வெற்றுரைபுகல்வது பின்னும் மதியீனமாம். இது எவ்வாறிருக்கின்றதென்னின் வீடு என்றும் கிரகம் என்றும் பெயர்பெற்ற ஓர் பொருளை வீட்டுக்கு வேறு பொருளென் றும், கிரகத்துக்கு வேறுபொருளென்றும் விளம்புதற்கொப்பா யிருக்கின்ற தென்க. இவர்கள் ஒரு பொருளை இருபொருள்க ளாக்கிக்கொண்டு பேசினால் அவ்வாறே அது இருபொருள்களாய்விடுமா? நூற்பிரமாணங்களுக்குமாறாக, இவர்கள் சொல்வ தை யங்கீகரித்தாலும் யுக்தி அனுபவங்கட்குப் பொருந்தவில்லையே!

சூரியனொன்று, நீர் ஒன்று, நீரிற்பிரதிபிம்பித்த பிரதிபிம்ப சூரியனொன்று ஆக முப்பொருள்களும் உவமானம். சிவனென்றும் ஆன்மாவென்றுஞ் சொல்லப்பட்ட பிரமம் ஒன்று, அவித்தையொன்று, அவித்தையிற் பிரதிபிம்பித்த ஜீவனொன்று ஆக முப்பொருள்களும் உவமேயமாம். உவமானத்தில் நீர்வற்றிப்போனால் பிரதிபிம்ப சூரியன் பிம்பசூரியனாய்ப்போய்ப் பிம்பசூரியனே மிஞ்சுகிறான். அவ்வாறே முத்திநி லையில் நீர்போன்ற அவித்தியாநாசத்தில் பிரதிபிம்பசூரியனைப் போன்ற ஜீவன் போய், பிம்பசூரியனைப் போன்ற சிவன் அல்லது பிரமம் அல்லது ஆன்மாவாய் மிஞ்சுகிறான். இது பிம்பப்பிரதிபிம்ப உவமானத்தை அனுசரித்துச்சொல்லும் வேதாந்த சித்தாந்தமாம். இனித் துவித சித்தரந்திகளின் நிலைமையாவது ஜீவனான பசுவுக்குப் பசத் தன்மை யொழிந்து ஜீவ பசுவுக்குப் பொருளான பரிபூரண ஆன்மா வாகி, அதன் பேரில் பரிபூரண சிவனான பிரமத்தோடு ஒன்று பட்டிருக்குமென்பது. ஒன்றுபட்டிருக்குமென்கை யுபசாரம். இரண்டு இரண்டேயென்பது அவரது மதசித்தாந்தம். இதிலுள்ள நியாநியாயங்களைப் புத்திமான்கள் அறியாமற்போகார்!

சித்தாந்திகள் ஜீவர்கள் பல என்றால் வேகாந்திகளும் அங்ஙனமே யென்கிறார்கள். சித்தாந்திகள் சிவன் அல்லது பி.ரமத்தை யொன்றென்றால் வேதாந்திகளும் அங்ஙனமே பகர்கின்றார்கள். இருகக்ஷிக்காரரும் ஜீவர்கள் விஷயத்திலும் பிரமம் அல்லது சிவன் விஷயத்திலும் ஒத்துப்போனார்கள். இனிப் பாக்கி நிற்பது ஒன்றே. அதுதான் ஆன்மாவென்பது. இந்த ஆன்மாவைப் பற்றித்தான் இப்போது விசாரணை. எந்தப்பொருளுக்குச் சிவன் அல்லது பிரமமென்று வேத சாஸ்திரங்களில் பேரிடப்பட்டிருக்கின்றதோ, அந்தப்பொருளுக்கு ஆன்மாவென்னும் பேர் இடப்பட்டிருக்கிறதா? இல்லையா? இடப்பட்டிருக்கிறதென்பதற்குப் பிரமாணம் நந்தன ஹு தை மீ 7 உ பத்திரிகையில் காட்டியே யிருக்கின்றோம். ஆதலால் சிவப்பிரமத்துக்கு ஆன்மாவென்கிறபேர் உண்மையே. சீவனுக்கும் ஆன்மாவென்கிற பேர் இருக்கிறதேயென்னின் இருக்கிறதென்பது உண்மைதான். ஜீவனுக்கு ஆன்மபதத் தை யுபயோகிக்கும்போது ஆன்மா அணுவாகின்றது; சிவன் அல்லது பிரமத்துக்கு உபயோகிக்கும்போது ஆன்மா பரிபூரணமாகின்றது. வேதாந்திகள் இவ்விரு பேதங்க ளையும் உணர்ந்திருக்கின்றமையால் எது எதை யெங்கெங்கே யுபயோகிக்க வேண்டு மோ, அது அதை யங்கங்கே யுபயோகிக்கின்றார்கள்.

## சித்தாந்திகளும் ஏகாத்துமவாதிகளே

பரிபூரணமான சிவப்பிரமத்துக்கு வேறாகப் பரிபூரணமான ஆன்மாவென்ப தொன்றுண்டென்னின், அந்தப் பரிபூரண ஆன்மா, அந்தப் பரிபூரண சிவப்பிரமத்துக்கு எப்பக்கத்தில் இருக்கின்றது? மேலே யிருக்கின்றதா? கீழே யிருக்கின்றதா? பக்கங்களி லிருக்கின்றதா? எங்கிருக்கிறதாகச் சொன்னாலுஞ்சரி, சிவப்பிரமம் கண்டப் பொருளாய்விடும். அதுமாத்திரமா, தனித்தனிப் பரிபூரணமெனச் சித்தாந்தி களாற் சொல்லப்படும் ஆன்மாக்கள் யாவுமே கண்டப்பொருளாய்விடும். சிவப்பிரமத் துக்கு மேலாவது கீழாவது பக்கங்களிலாவது ஆன்மாக்கள் இருக்கின்றனவென்று சொல்லும்போது ஷை மேல் கீழ்ப் பக்கங்களில் சிவப்பிரம மில்லாமற்போம். கடத்துக்கு மேலாவது கீழாவது பக்கங்களிலாவது படமிருக்கிறதென்றால் அந்தப் படம் இருக்கிறவிடத்தில் கடமும், கடமிருக்கிறவிடத்திற் படமும் இரா. அங்ஙனமே சிவப்பிரமம் இருக்கிறவிடத்தில் ஆன்மாக்களும், ஆன்மாக்கள் இருக்கிறவிடத்தில் சிவப்பிரமமும் இல்லையென்று சொல்ல நேரிடும். சிவப்பிரமத்துக்கும் ஆன்மாக்க ளுக்கும் தனித்தனிப் பரிபூரணஞ்சொல்லும் சித்தாந்திகளுக்கு இஃதுடன்பாடாமா? சிவப்பிரமத்துக்கு மேலாவது கீழாவது பக்கங்களிலாவது ஆன்மாக்கள் இருக்கின்றன வென்பதில் இவ்வளவு ஒவ்வாமையிருப்பதால் 'சிவனுக்குள் ஆன்மாக்கள் பூரணமாயிருக்கின்றன; அது எதுபோலென்னின் குடத்துக்குள் நீர் இருப்பது போல்" என்றாலோ குடமென்னும் சொல்லுக்குப்பொருள் மண்ணினாலான ஓடுதான். அது சுற்றிலும் இருக்கின்றது; இடையிற்பொருளில்லை; வெறும் வெளிதான். அந்த வெளி யிற்றான் நீர் இருக்கிறது. அந்த நீருள்ளவிடத்தில் குடமும், குடமிருக்கிறவிடத்தில் நீரும் இல்லை. குடத்துக்குள் இருக்கிற வெறு வெளியில் நீர் இருக்கிறதேயன்றிக் குடமா யிருக்கிற பொருளில் இல்லை. அவ்வாறு சிவனுக்குள் வெறு வெளியிருக்க வேண்டும்; அவ் வெளியில் சிவனிருக்கப்படாது. சிவனில்லாத அவ்வெறு வெளியிற் றான் ஆன்மாக்கள் இருக்கவேண்டும். இவ்வுவமானத்தால் குடமும் நீரும் எவ்வாறு நிறைவற்ற பொருளோ, அவ்வாறே சிவமும் ஆன்மாக்களும் நிறைவற்ற பொருளாகின்றன. ஆதலால் இவ்வு வமானம் பயன்படாது. இனிப் பாலில் நெய்யிருப் பது போலச் சிவனிடத்தில் ஆன்மாக்களிருக்கின்றனவென்னின் பாலில் நெய்யிருப்ப தனால் பாலும் நெய்யும் பரிபூரணமாகாது. பாலிலிருந்து நெய்யை வேறுபிரித்தால், வேறு பிரிந்த நெய், எவ்வளவோ அவ்வளவு எடை அல்லது அளவு பாலில் குறைந்து போம். பாலிலிருந்து நெய்யைப் பிரித்தால் பிறகுபாலென்னும் பேரில்லை; பாலுமில்லை. தயிரும் நெய்யுமேதானிருக்கின்றன. பாலைக் காய்ச்சிக் கடைந்தால் தயிருநெய்யுமாய்ப்பிரிகின்றது. எது பிரிகின்றதோ அது முன்பு கூடியே யிருக்க வேண்டும். தயிரும் நெய்யும் ஒன்றாய்க் கூடியிருந்தகாலத்தில் பாலென்றுபேர். பாலென்ற சொல்லுக்குப் பொருள் நெய்யும் தயிருந்தான். பொன்னுங் களிம்பும் ஒன்றாய்க் கூடியபோது செம்பென்று பேர். பிரித்துவிட்டால் பொன்னுங் களிம்பு மாகின்றது. பொன்னுங் களிப்புமன்றிச் செம்பென்னுஞ் சொல்லுக்குப் பொருளில்லை. செம்பு என்பது சொல்லும் அதற்குப் பொருள் பொன்னுங் களிம்புமாம். அங்ஙனமே பால் என்பது சொல்லும் அதற்குப்பொருள் நெய்யும் தயிருமாம். பாலென்னுஞ் சொல்லுக்குத் தயிர் நெய்களையன்றி வேறே யொருபொருளிருப்பதாய்க் கருதுவது பிராந்தியே. பாலிலிருந்து தயிர்கெய்களை வேறு வேறு பிரித்து விடுகின்றமையால் அது பின்ன சமபந்தியேயாம். நெய்யுந் தயிரும் பின்னசம்பந்தியா யிருப்பது போல் தயிரும் வெள்ளை நிறமும் பின்ன சம்பந்தியாகாது; அபின்ன சமபந்தியாம். எது பின்ன சமபந்தியோ அது ஒரு காலத்தும் அபின்ன சம்பந்தியாகாது. பின்னம்

அபின்னமாதலும் அபின்னம் பின்னமாதலும் ஒரு போதுமின்று. பாலின்கண் தயிரும் செய்யும் அபின்னமபோற றோற்றினும் பின்னம் பின்னமே. பாலை அணு பரமாணுக்களாகப் பிரித்துப்பார்க்கும் சத்தி நமக்கிருந்தால் அது வேறு வேறாகவே தோன்றும். உப்பு நீரிலும் நல்ல நீர், உப்பு இவை வேறு வேறாயிருக்கின்றன. உப்பு நீரில் நல்ல நீர் வேறாகவும் உப்பு வேறாகவும் நமக்குத் தோன்றாவிடினும் அவை வேறுவேறு தான். உப்பு நீரில் நூற்றுக்கு இருபத்தேழுபங்கு உப்பும் மற்றப் பங்கு நல்ல நீரும் இருக்கின்றன. உப்பு நீரைக் காய்ச்சினால் நூற்றுக்கு எழுபத்துமூன்றுபங்கு நல்ல நீர் ஆவிருபமாய் மேலேபோக மற்ற இருபத்தேழுபங்கு பூமியிற் றங்கிவிடுகின்றது. உப்பும் நல்ல நீரும் பிரிந்துபோகின்றமையால் அவை பின்னமாகக் கூடியிருந்தனவென்றே சொல்லவேண்டும். உப்புநீரைப் பார்த்தால் நீரும் உப்பும் அபின்னமாய் ஒன்று பட்டிருப்பதாகவே தோற்றினாலும் உண்மையில் பின்னமாய் இரண்டுபட்டேயிருக்கின்றன. இரண்டுபட்டே யிருக்கின்றமையால் ஒன்றிருந்த விடத்தில் மற்றொன்றில்லை. அதாவது உப்பு இருந்தவிடத்தில் நீரும் நீர் இருந்தவிடத்தில் உப்பும் இல்லை. இதைப் போலவே பாலாயிருக்குங் காலத்திலும் நெய்யிருக்கு மிடத்தில் தயிரும் தயிர் இருக்குமிடத்தில் நெய்யும் இரா. இனி எள்ளில் எண்ணெய்போலென்னின் எள்ளையெடுத்துப் பிழிந்தால் பிண்ணாக் கும் நெய்யுமாகப் பிரிகின்றன. பிண்ணாக்கும் நெய்யுஞ் சேர்ந்தே யெள்ளென்னும் பேர்பெறுகின்றது. அதுவும் இரண்டுபொருளாய் வேற்றுமைப்பட்டுப் போகின்றமை யால் உய்த்து நோக்குழிப் பிண்ணாக்கு இருந்தவிடத்தில் நெய்யும் நெய் இருந்த விடத்தில் பிண்ணாக்கும் இல்லையாகி வேறு வேறு பொருளாகின்றன. ஆதலால் இதுவும் பொருத்தமுடையதாகாது. ஆகாயமானது மற்ற வாயு தேயு அப்பு பிருதி வியாகிய விவற்றி னிறைந்திருப்பது போல், சிவப்பிரமமானது ஆன்மாவில் நிறைந்திருக்கிறதென்று சொன்னால் யாதுதோஷ மென்னின் தோஷம் தோஷமே. ஆகாயமானது: மற்ற வாயு தேயு அப்பு பிருதிவிகளுடன் காரணகாரிய சம்பந்தம் பெற்றது; மண்ணுங் குடமும் போல. ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து தேயுவும், தேயுவிலிருந்து அப்புவும், அப்புவிலிருந்து பிருதிவியும் உண்டாகி ஒடுங்கு ங்கால் தோன்றிய முறைப்படி ஒடுங்குகின்றனவாக வேதமுதலிய கலைகள் விளம்பு கின்றன. ஆதலால் ஆகாயமும் மற்றச் சதுர்பூதங்களும் காரண காரிய சம்பந்தத் தைப் பெற்றிருக்கின்றன வென்பது மறுக்கப்படாத விஷயமாம். ஆகாயங் காரணமும் மற்றப் பூகங்கள் காரியமுமாகிறபோது காரணமான மண்ணையன்றிக் காரியமான குடத்துக்குப் பொருள் எவ்வாறின்றோ, அவ்வாறே காரணமான, ஆகாயத்தையன்றிக் காரியமான வாயு தேயு அப்பு பிருதிவிகளுக்குப் பொருளில்லாமற்போம். இந்தப்பிரகாரமே சிவப்பிரமப்பொருள் காரணமும், ஆன்மாகாரியமுமாகி, சிவப்பிரம த்தையன்றி ஆன்மாவுக்குப் பொருளில்லாமற்போம். காரியத்திற் காரணம் பூரணமா யிருக்கிறதெனல் காரணத்தைப்போல் காரியஞ் சத்தாயிருந்து, அதில் நிறைய காரண மிருக்கின்ற தென்பதல்ல. மண் குடத்தினிறைய விருக்கின்றதென்னில் மண்ணைப் போலக் குடமெறைபொருள் ஒன்று சத்தாயிருந்து, அதில் நிறைய விருக்கின்ற தென் பதல்ல. கயிறானது பாம்பின்கண் நிறைய விருக்கின்றதென்றால் கயிற்றைப்போலப் பாம்பென்கிற பொருள் ஒன்று சத்தாயிருந்து அதில் கயிறு நிறைந்திருக்கின்ற தென்பதல்ல, கயிறு உண்மை; பாம்பு உண்மைப்போலி. அதுபோல் மண் உண்மை; குடம் உண்மைப்போலி. இத்திருட்டாந்தங்களைப்போல் ஆகாயம் உண்மை; மற்றச் சதுர்பூதங்களும் உண்மைப்போலி இவைகளைப்போலச் சிவப்பிரமம் உண்மைப்

பொருள்; ஆன்மா உண்மைப்போலிப்பொருளாம். சிவப்பிரமமும் ஆன்மாவும் குடமும் படமும் போலல்ல. குடமும் உண்மைப்பொருள்; படமும் உண்மைப் பொருள். இவ்வாறு சிவப் பிரமத்தையும் ஆன்மாவையுஞ் சொல்லின் இரண்டுங் கண்டப்பொருளாய் அபரி பூரணதோஷத்தை அடையும். இரண்டையும் பரிபூரணப் பொருளெனக்கூறும் துவித சித்தாந்திகட் கி∴துடன்பாடாமா? சிவப்பிரமத்தைப் பரிபூரண சத்தாகவும் ஆன்மாவை அணுரூப சத்தாகவுங் கொள்பவர்க்கே கடபடம் போல இரண்டும் சத்தாகாவென்னின் இரண்டையும் பரிபூரணமென்பார்க் கெங்ஙனம் பொருந்தும்? இதனால் ஆகாயம் மற்றச் சதுர் பூதங்களிலிருப்பதுபோலச் சிவப்பிரமம் ஆன்மாவில் பூரணமாயிருக்குமென்கை துவிதிகளுக்குப் பாதகமும் அத்வைதிகளுக் குச் சாதகமுமாய் முடிந்ததென்றறிக.

இதனாற் றேர்ந்ததியாதெனின் சச்சிதாநந்த நித்திய பரிபூரணப் பொருளுக்குப் பிரமமென்றும், சிவனென்றும், ஆன்மாவென்றும் சுருதி முதலிய பிரபல நூல்கள் கூறுகின்றனவெனவும், அப்பொருள் ஏகமாயிருப்பதால் வேதமுதலிய நூற்களைப் பிரமாணமாகக்கொண்ட யாவரும் ஏகான்மவாதிகளாமென்று சொல்லத் தக்கவரென வும், ஷை பிரமாணங்களை இச் சித்தாந்திகளும் அங்கீகரிக்கக்கடமைப்பட்டிருப்பதால் இவர்களும் ஏகான்மவாதிகளே யாமெனவும், இதற்கு மாறிப் பேசுவோர் வேதசாஸ் திரவுண்மை யறியாதாரெனவும், அப்பரமசிவ ஆன்மப்பொருளுக்குப் பின்னமாக ஜனன மரண துன்பங்கட்குட்பட்ட அணுஜீவர்கள் பல அநிர்வசனீயமாக வுள்ளன வெனவும், இடையில் பரிபூரண ஆன்மாக்கள் பல சத்தா யிருக்கின்றனவென்பது வெற்றுரையே யாமெனவும், துவிதசைவ சித்தாந்தம் போலிச்சிந்தாந்தமாய்த் தள்ளத்தக்கதெனவும், அத்துவிதசைவசிந்தாந்தமே யதார்த்த சித்தாந்தமாய்க் கொள் ளத்தக்கதெனவும், அதுவே சுருதியுக்தி அனுபவங்கட்குப் பொருந்தியதெனவும் பசுமரத்தாணி போல் நாட்டிய வாறாமென்றறிக.

வேதாந்திகள் காரணகாரியவாதம் பரிணாமவாதம் பிம்பப்பிரதி பிம்பவாதம் விவர்த்தவாதமுதலிய பலவித வாதங்கள் ஒவ்வொரு அவசரத்தினிமித்தம் ஒவ்வொன்று கூறினும் முடிவில் தீர்மானமாய் விவர்த்தவாதமே கூறுகின்றார்கள். அவ்விவர்த்தங்கள் பலவற்றிலும் அதாவது கயிற்றரவு கானனீர் இந்திரசாலம் சொப் பனவுலகு முதிலியவற்றிலும் சொப்பனவுலகே தீர்மானமாய்க் கூறுகின்றார்கள். ஒவ்வாரு அவசரத்துக்கு ஒவ்வொன்று கூறுவதற்குக் காரணமின்னதென "ஓர் இந்து" என்பவர் விளக்கிக்காட்டியிருக்கிறார். அப்படியே பிரதிபிம்பமாகச் சொல்லிய சீவனையுங் கொள்க. பிரமஸ்தானத்தில் மனதையும் சீவன் ஸ்தானத்தில் சொப்பன சீவனையும் சீவனுக்கிடமான அவித்தியாஸ்தானத்தில் சொப்பன சீவர்கள் தோற்று வதற்கிடமான (மனத்தின்கணுள்ள ஒர் வித) சத்தியையும் உவமானகவைத்துப் பார்க்க வேண்டியது இனி முன்பத்திரிகையில் எழுதிய பிரமாணங்களோடு இதிலு ள்ளவற்றையுஞ் சேர்த்து வாசிக்க.

**சூதசங்கிதை எக்கியவைபவகாண்டம்**
**ஆன்மமந்திரமுரைத்த அத்தியாயம்.**

*மருவுபரவான்மாசத்தியசொரூபன்பூரணன்மெய்வயங்குஞான*
*வுருவனிலகானந்தசொரூபனகம்பதார்த்தமாயுற்றவான்மா.* (1)

*விசுத்தசத்துவப்பிரதானமாயோபாதிகனானவிமலமூர்த்தி*
*யசுத்தசமுசாரவர்ச்சிதனகம்பதார்த்தமாகியவான்மாவும்.* (15)

**ஷை ஷை ஞானயாகவைபவமுரைத்த அத்தியாயம்.**

*புனிதவேதவாக்கியங்களும்ஆன்மாஏகனென்று.* (30)

**ஷை ஷை பராசத்தி விசாரமுரைத்த அத்தியாயம்.**

*பாவுதானென்னும்நிறையான்மாவினின்றும்பல்லுகமுஞ்சீர்*
*மேவுசீவனுமீச்சுரனுமாயாசத்தியும்வேறல்லரம்மா.* (11)

*ஆன்மஞானிக்குவிதிநிடேதவிவகாரங்களனைத்துமில்லை*
*மேன்மைமிகுமான்மஞானத்திருமாமகத்தின்வளம்விள்ளமுற்றும்* (13)

*பான்மையுறுகோடிகற்பமானாலுமுடியாதுபரசுபாணி*
*வான்மதிக்குமருளானீரிதுதெரிந்துதன்னியராய்வயங்கினீரே.* (2)

**ஷை ஷை திரவியசுத்தியுரைத்த அத்தியாயம்.**

*துரமிகுசச்சிதாநந்தஆன்மாவென்றியாவர்களுமுரைக்கும்வத்து.* (2)

**ஷை ஷை பாவபரிபாகமுரைத்த அத்தியாயம்.**

*பொருவிலான்மசொரூபத்தைப்போற்றியுணர்ந்துபொலிகின்றோன்*
*கருமபந்தமிலாதிருப்பன்கரைந்தஇந்தப்பிரமவித்தை*
*பெருகுமருளார்பராசத்திபிரசாதத்தினாற்கிடைக்கும்.* (28)

**பிரமவித்தியா, விஜய ஹு ஆவணி மீ 272**